உ

கணபதி துணை.

---

# ஸ்ரீ மெய்யப்பசுவாமிகள்

## சரித்திர சங்கிரகமும்,

# பதிற்றுப்பத்தந்தாதியும்.

—(:0:)—

இரண்டாம் பதிப்பு.

இவை

ஸ்ரீவன்றொண்டரவர்கள்

மாணாக்கருளொருவராகிய

காரைக்குடி

ராம.சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்று,

---

டிசுவாமிகளின் சேஷ்டபௌத்திரர்

மெ.மெ. மெய்யப்பசெட்டியாரவர்களால்,

---

மதுரை

ஸ்ரீ ஞானசம்பந்த விலாஸ பிரஸில்

அச்சிடப்பெற்றது.

——[illegible]

[illegible]

இந்நூல், இற்றைக்கு முப்பது வருஷங்களுக்குமுன் அச்சிடப்பெற்று, வெளிவந்து நாளடைவிலே படிக்கவிரும்பினவர்களுக்குக் கொடுக்கப்பெற்று, முழுதுஞ் செலவாகி விட்டபடியால் இப்பாட்டுடைத்தலைவர்களாகிய ஸ்ரீ மெய்யப்பசுவாமிகளின் சேஷ்ட பௌத்திரராகிய மெ. மெ. மெய்யப்பசெட்டியாரவர்கள் இதனை மேலும் அச்சிடவேண்டுமென்று விரும்பிய நோக்கி, இரண்டாமுறையும் அவ்வாறு செய்யப்பெற்றது.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

ஸ்ரீமெய்யப்பசுவாமிகள் பௌத்திருமாரரும்
இந்நூலாசிரியர் மாணக்கருளொருவருமாகிய

அள. ராம.

## திருநாவுக்கரசு செட்டியாரவர்கள்

இயற்றியது.

---

பொன்மாது கலைமாது புகழ்மாது மெய்ஞ்ஞான புனிதமாது
முன்மாதர் நிறைந்துறைய முறையுறநிற்பல் லேமையைக்கடவா முனிவர் கோ
என்னாளா விராமகவென் றெந்தைமெய் யப்பசுவாமியின் றருட் கேய்ந்
நன்மாலைப் பிறப்பந் தந்தாதி சிறந்துடனயப்பச் செய்தான்.

தென்னாட்டுச் செருக்கோட்டி நகரிற் கல்விநலஞ் சிறப்ப வாழ்வோன்
தன்னைமா வாசிர் நலத் திராமனு தப்பெரியோ னயந்து பெற்ற
தன்மைமிகு வேலருணான் மிக்கோர் பாராட்டியெனுந் தனிப்போர் பூண்
பொன்னகர் சேர் கோவிலினன் மெய்ஞ்ஞானத் திறம் புணர்ந்தும் புனி

என்றென்றுநிற் றறிவோர்க் கெளிதாப் பலநூல்களிசைத்தன் பே
நன்பாற்று மேற்பற்றிம் படியோதி மெய்ப்புரியு ஞான நிலான்செம்
பொன்போன்ற சடைக்கொன்றைப் புதுமாலை யணிபரமன் பூம்பா
லன்பார்ந்த கனிமனத்தான் சொக்கலிங்க தேசிகன் மெய் யறிவன்

இவர்களுக்கு, அந்நாளிற் சிலகாலம் ஒரு வயிற்றுநோயிருந்தது. அக்காலத்திலே பாண்டிநாட்டுச் சிவக்ஷேத்திர யாத்திரைசெய்யக்கருதி முதலில் துவாதசாந்த புரமாகிய மதுராபுரிக்குவந்து, பொற்றாமரையிலே ஸ்நானஞ்செய்து ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேச தெரிசனஞ்செய்துகொண்டு சிலநாளங்கிருந்தார்கள். அப்போது வயிற்றுநோய் சாந்தமானதுதெரிந்து, இத்தலத்திலே நமக்குத்திருவருள் துணைசெய்யுமென்று பொதுவகையான் மதித்துக்கொண்டு, தாம்கருதி வந்தபடி ஏனையசிவஸ்தலங்களுக்குஞ் செல்லுங்கால், வயிற்றுநோய் மீளவும்வந்தது. வரினும் உத்தேசித்தபடி அத்தலங்களைத்தெரிசித்துக்கொண்டுமீட்டும் மதுரைக்குவந்தார்கள். வந்தவுடன் அவ்வயிற்றுநோய் சாந்தமாயது. அது நோக்கி அம்மதுராபுரியில் மேலுஞ்சிலநாள் வசிக்குங்கருத்துடையவர்களாயிருந்தும், உடன்வந்த நண்பர்கள் கருத்துக்கிணங்கி அம்மதுராபுரியினின்றும் ஒருவாறுகச்சென்று கோயிலூரையடைந்தார்கள்.

அப்போது இடையிலே சாந்தமான வயிற்றுநோய் முன்போலவர, அதுகண்டு இஃதென்னையோ வென்றலோசித்து, இவ்வயிற்றுநோய்க்குத்தான், அநாதிதொடுத்துத் தொடர்ந்துவந்த பிறவிநோய்க்குத்தான், பரம அவுழ்தம், துவாதசாந்தபுரமாகிய மதுராபுரிவாசமேயென்று துணிந்து, பசுவைநோக்கிய கன்றுபோல மதுராபுரியைநோக்கி அளவுகடந்த அன்பும் ஆராமையும் பொருந்தக்கண்ணீரும் கம்பலையுமுடையவர்களாய் "எம்பிரானெனையென்று" கொளுங்கொலோ என்னும் வேண்டுகோளுடையர்களாய்ச் சென்று மதுராபுரிக்கு வந்துபொற்றாமரை ஸ்நானஞ்செய்து சித்திவிநாயக ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசுர தெரிசனஞ்செய்துகொண்டு அங்கிருந்தார்கள். திருவருளினாலே வயிற்றுநோய் முற்றும் நீங்கிவிட்டது. அதனாலும், முன்னுள்ள அதிவிருப்பத்தாலும், சீவ பரியந்தம் இம்மதுராபுரியெல்லையைவிட்டுநீங்குவதில்லையென்று உறுதியான விரதமேற்கொண்டு, குடும்பப்பற்று முற்றும்நீக்கிச்சிவதீக்ஷாதி சிவசமஸ்காரமுற்றும்பெற்று அம்மதுராபுரி நிவாசராய் வீற்றிருந்தருளினார்கள்.

அப்படி வசித்துவருங் காலமுழுதுந் தினந்தோறும் பொற்றா

கரையிலும்* புறத்தொட்டித் தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து, ஜெபதபதியானபூசாதி சிவநியமங்களை முடித்துக்கொண்டு, திருவனந்தல் முதலிய ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேச பூசாகாலங்களெல்லாந் தவறாது தரிசித்து, உச்சிக்காலத்துக்கு முன் மீட்டும் அத்தீர்த்த ஸ்நானஞ்செய்து, உச்சிக்கால தரிசனமுஞ்செய்தலும், இதற்கிடையே அநேகபிரதக்ஷிண நமஸ்கார பாராயணாதிகள் செய்தலும், பின்பு அபராந்ந காலத்தில் ஒருவேளைபுசித்தலும், போசனானந்தரம் பொற்றாமரை ஸ்நானஞ்செய்து, நியமாநுஷ்டான பரர்களாய்த் திருமாலைத்திருப்பணி செய்தலும், சைவசித்தாந்த சாஸ்திரசிரவணாதிகள்புரிதலும், அர்த்தசாமபூஜா காலத்திற்றவறாது தரிசித்தலும், சொக்கநாதஸ்வாமி சுவர்ணரத்தினமயமான சிவிகையூர்ந்து எழுந்தருளுந் திருக்கோலந் தெரிசித்துங் கொண்டுசென்று மீனாக்ஷியம்மையாராலயத்தையடைந்து திருப்பள்ளியறைப் பூஜாதரிசனஞ்செய்தலும், அதுபரிபூர்த்தியானபின் புறம்போந்து ஆடிவீதி பிரதக்ஷிணஞ்செய்து சென்று நிராகாரசீலர்களாய்த் திருமடத்திற் பூமியிற் சயனித்தலுமாகிய நித்திய நியமங்களை மேற்கொண்டு இந்நியமங்களில் ஒன்றேனும் ஒருசிறிதேனும் ஒருதினமேனும் ஒருகாலமேனும் தவறாது திருவருளுடனின்றுசெலுத்த உள்ளக்கிளர்ச்சியோடு நடத்திவந்தார்கள்.

இப்படி வருங்காலத்திலே, சுவாமிகள் சிவாலயத்திருப்பணிசெய்து பெரும்பேறடைதற்குரிய பெருந்தவம் பூர்வஞ்செய்துள்ள. அமராவதிபுத்தூர் வயி. நா. க.ராம. வகையினரைப்பற்பல திருப்பணியிற் புகுத்தியுய்விக்கத் திருவுளங்கொண்டு, முதலில்-புஷ்பத்திருப்பணியிற் றொடங்குவித்து, அதனைத் தாங்களேவகித்து நடத்திவந்தார்கள். அத்திருப்பணி நடந்துவரவர அவர்களுக்குப் பொருளபிவிருத்தி முதலிய லாபகரங்கள் மிகுந்துவந்தன.

அதன்பின், ஸ்ரீ மீனாக்ஷியம்பாகோயில் முதற்பிரகாரத்து வடக்குத்திருமதில் மிகப்பழுதாயிருந்ததைநோக்கி அம்மட்டிலதனைச் சீர்ணோத்தாரணஞ் செய்விக்கலாமென்று மிகவெகுவாகச் சொல்லியினை

---

* இப்புறத்தொட்டித்தீர்த்தஸ்நானம் ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசுரர் மகாபா[illegible]க்கு ஆஞ்ஞாபித்த முறைமையை அனுசரித்து மேற்கொண்டது;

க்கி அத்திருப்பணியிற் றொடங்குவித்தார்கள். அவர்களும், நமது சுவாமிகள் சொல்வனவெல்லாம், உத்தமோத்தம சிவபுண்ணியவிசிஷ்டமாவதொன்றோ, பொருள்விருத்திமுதலிய இம்மைப்பயன்களைத் தருதலும் நேரேதெரிகின்றோம் என்றெழுகின்ற வுள்ளக்கிளர்ச்சியால், சுவாமிகள் சொல்வதைச்செய்வதில் அதிப்பிரியர்களாய் அத்திருமதிற்றிருப்பணியைப் பூர்த்திசெய்தார்கள். அப்போதும் பொருள்விருத்திமுதலிய பற்பல நலங்கள் மேலுமேலும் கைகூடிவந்தன. அதனாலவர்கள் மனவூக்கந்தெரிந்து அம்முதற்பிரகாரத்தளவரிசை இரண்டாம்பிரகாரத் தளவரிசை திருப்பள்ளியறை முழுதும் சொர்ணமயமாக்குதல் முதலிய திருப்பணிகள் செய்வித்தார்கள்.

அவைகள் பூர்த்தியானவுடன், அம்முதற் பிரகாரத்திருமதிலில் கல்வியறிவில்லாரும் காட்சி மாத்திரத்திற் கண்டுணரவும், கற்றவர்களும் இவை கேள்விப்பொருளைக் காட்சியளவையில் அநுபவமாகக் காட்டும் எடுத்துக்காட்டென்றுகொண்டாடவும், பெரியபுராணத்தை அநுசரித்து உண்மை நாயன்மார்களது நாமரூப சரித்திர விசேடங்களைச்சித்திர வரிசைகளாகத் தமது திருக்கரத்தாற் குறித்துக்கொடுத்து எழுதுவித்தார்கள்.

அதன்பின்பு, சுவாமிகோயில் முதற்பிரகாரத் திருமதில் பெலமாயிருந்தாலும், மண்டபங்கள் மிகப்பழுதாயும் பலமுடுக்குகளாயும் பிரகாரம்வருவதற்கு முட்டுப்பாடாயுமிருந்தமையால் அவைமுழுதும் பிரித்துப் புதிதாகப்பிரகாரம் நேராய்வரும்படி ஒழுங்குபெறச் செய்து அத்தெற்குத்திருமாளிகைப் பத்தியில் அறுபத்துமூன்று நாயன்மார்களைப் பிரதிஷ்டை செய்யக்கருதி, அந்நாயன்மார்களிற் சில மூர்த்திகளில்லாமலும், உள்ளமூர்த்திகளுக்கும் பூசைமுதலியன இல்லாமலும், இரண்டாம்பிரகாரத்து நிருதிமூலையில் கவனிக்கப்படாமலிருப்பதைக்கண்டு திருவுள்ளம்வருந்தி, அம்மூர்த்திகளுடன் மேலும்வேண்டிய மூர்த்திகளைச்சிற்ப முறைப்படி செய்வித்துப் பூர்த்தியாக்கி, மேற்கருதியபடி அத்திருமாளிகைப்பத்தியிற்சிற்பவர்க்க முறைப்படி பீடமமைத்து, அதன்மேல் அவ்வுண்மை நாயன்மார்களைப் பிரதிஷ்டைசெய்வித்து, ஈசுரவருஷம் தைமீ நடந்த ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசுரமஹா

கும்பாபிஷேகத்துடன் கும்பாபிஷேகஞ் செய்வித்து, நித்திய பூசையும் அந்நாயன்மார்கள் திருநட்சத்திரந்தோறும் விசேஷபூசையும் நடந்திவரச்செய்தார்கள்.

அதன்மேல், சொர்ண ரத்தின ரசிதாதிகளால் ரிஷப கைலாச நந்தியாதிவாகனங்களும், முத்துக்கவச கிரீடகங்கண குண்டலகோளகாதிய திருவாபரணங்களும், இன்னும்பற்பல இன்றியமையாதனவைகளும் செய்வித்தார்கள்.

அதன்மேல், சுவாமி சந்நிதியிலுள்ள பெரியகிழைக்கோபுரம் பழுதாயிருப்பதைக்கண்டு, அதனாலபாயம் வருமென்றுகருதி கவர்னமெண்டார் அந்தமட்டிற் சித்திரைவீதியிற் சனங்கள் செல்லாமலடைத்துவைத்ததுமன்றி, அக்கோபுரத்தையும் இடித்துவிடுவதாகக்குறித்திருந்தசமயம், அக்கோபுரத்திலுள்ளேறிப்பார்க்கப்பயந்து எல்லோரும் ஒதுங்குவதுதெரிந்தும், நமது சுவாமிகள் திருவருளைத்துணையாகத்துணிந்து, அதனுள்ளேறி எங்கும்பார்த்து இதைபலப்படுத்தலாமென்று நிச்சயித்துக்கொண்டு, வெளிவந்து வயி. ராக. ராம. நாகப்பசெட்டியாரவர்கள் வேங்கடாசலச் செட்டியாரவர்கள் இருவரிடத்தும், இக்கோபுரத்தை இடிக்கவிடாமல் பாதுகாத்தற்கோர் உபாயம் உண்டு, அதற்கான செலவுதொகையும் சுருக்கமாகச்செய்யலாம், அஃதாவது ஒன்பதுநிலையுள்ள இக்கோபுரத்தினது அடிநிலையாத்திரம் முற்பக்கம்பிற்பக்கத்திலுள்ள நாலுதுவார பாலகர்களையும், அந்த வரிசையிலுள்ள மற்றுஞ்சுவர்களையும் தெளிவாகச்செய்து வர்ணம் வைத்துவிட்டால், யாருக்கும் இடிக்க மனந்துணியாதென்று இதமாகவும் பொருத்தமாகவும் எடுத்துச்சொல்லி, அச்சொல் நயத்தினாலேயே அவ்விருவரும் அதற்குடன்பாடு செய்யக்கண்டு, குறித்தபடியே அதிசீக்கிரம் செய்வித்துக்காட்டிய அளவில், அவ்விருவருமிக மகிழ்ந்து, அக்கோபுரமுழுதும் அவ்வாறுசெய்ய மிகப்பெருந்தொகை செல்லக்கூடியதாயிருந்தும், இவ்விதமே இக்கோபுரமுழுதுஞ் செய்விக்கவேண்டுமென்று அவர்களை கேட்டுக்கொள்ள, அவ்வாறேஒன்பது நிலையும் பரிபூர்த்திசெய்வித்து மேலும், அம்பாசந்நிதிக் கிழைக்கோபுரம் தெற்கு மேற்கு வடக்குக்கோபுரங்களையும் பலப்படுத்தி அவ்வாறே செய்வித்து நிறைவேற்றினார்கள்.

இத்திருப்பணிகள் நிகழுங்காலமெல்லாம் நமது சுவாமிகள் நித்
தியநியமமாக மேற்கொண்ட சுவர்ணபத்மினி ஸ்நானுஷ்டானுடான செப
தபதியான பூஜாதிகள் அவ்வக்காலவேளையிலே கடவாதுபுரிந்து, திருவ
னந்தல் முதலிய காலங்கடோறும் ஸ்ரீமீனுக்ஷிசுந்தரேசசிவதெரிசனு
இசெய்துவருகின்ற அக்காலங்களினிடையிடையே, கோபுரங்களிலே
சிற்பர்கள் செய்துவருஞ் சுதாவிக்கிரகாதிகளைத் தங்கள் திருக்க
ரத்தாற் றிருத்திக்காட்டி அவ்வாறுசெய்வித்தலும், அங்கங்கே சிவ
பரத்துவ விளக்கமாகச் சிவாகமாதிகளிலுள்ள சிவசம்பந்தமான மூர்
த்திகளைத் தாங்களே குறித்துக்கொடுத்து இன்னவிடத்து இன்னவி
க்கிரகங்களைச் செய்கவென ஆக்ஞாபித்துப் பின்னரும் நேரிற்பார்த்
துத் திருத்தஞ்செய்தலும், பொற்றாமரையைச்சார்ந்த வடக்குத்திரு
மதிலில் ஆரம்பித்து அறுபத்துநான்கு திருவிளையாடற் சரித்திரங்க
ளை, அப்புராணத்துக்கு இஃதோர் சாட்சிப்புலனு முறையென்று அறி
ஞரெலாம் வியப்பச்சித்திரரூபமாக எழுதுவித்து, யாவரும் அக்கா
லத்துநடந்த அத்திருவிளையாடல்களை இக்காலத்து நேரிற்காணப்பெ
ற்றேமென்று மகிழச்செய்தலும், தங்களது அரும்பெருமைமையைதெ
ரிந்து தங்களைத் தரிசிக்கப்பெறுதலே பெரும்பேறென்று வந்துவண
ங்கும் உத்தமபத்தர்களுக்குச் சிவசாஸ்திரோபதேசஞ்செய்து, கற்ற
தனலாயபயன் வாலறிவனுகிய சிவன்நற்றுடொழலே யென்றுண்மை
விளக்கி, அதனை இறுகப்பற்றி நிற்கச்செய்தலும், "தாம் பிரமங்கண்
டவர்போற் றம்மைக்கண்டாங்கதுவே, நாம்பிரமமென்பவர் பானண்
ணுதே" என்பதுமுதலிய உண்மைநூல்களை யெடுத்துவிளக்கி நாம்பி
ரமமென்னும் மாயாவாதமுதலிய அந்நியசமயங்களிற் புகுதாமல்வில
கச்செய்தலும், அத்தகை உத்தமபத்தருள்ளே பெருஞ்செல்வர்களா
யுள்ளாரைக்கொண்டு திருநந்தனவனமுதலிய திருப்பணி செய்வித்த
லுமாகிய இவைபோலின்னும் பற்பல சிவகைங்கரியங்களையே செய்து
வந்தார்கள்.

இத்தகைய சிவபுண்ணிய மெல்லாஞ்செய்து முற்றினவர்களுக்
கே உண்மை நாயன்மார்க்கு ஒப்புயர்வில்லாத் இப்பிரியகைங்கர்யமாகிய
உத்தமோத்தம சிவபுண்ணியங் கைகூடுமென்னு முண்மையினுக்கு
ஏதுக, "உத்தமச்சிவபத்தரிற் பெரிதுத்தமர்களாய்ச் சைவப்பிரபுருல

சிரேஷ்டர்களாயுள்ள தேவகோட்டை மெ. வகையார் வயி. நாக. ராம. வகையார், மற்றும் அன்பர்களாகிய எல்லாருக்குந் தமது திருவுள்ளக் கருத்துத்தெரிவித்து அவர்யாவருங்கொடுத்த பெருமபொருள்கொண்டு ஸ்ரீமீனாக்ஷியம்மையார் சந்நிதிவீதியிலே குருபூசை மடாலயம் செய்வித்து அதில் வெகுதான்யஸு தைமீ ஆத்திலே கண்ணப்பநாயனார் குருபூஜா விசேஷ சுபதினத்திலே, முன்னரே சிற்பவிதிப்படி தங்களாற் செய்விக்கப்பெற்ற உண்மைநாயன்மார் திருவுருவத்திருப்படம் பிரதிஷ்டை செய்வித்து நித்தியபூசையும் கண்ணப்பநாயனார் குருபூசைமுதலாக நைமித்திக விசேஷ குருபூசை முதலியனவும் நடத்தி, இவைகள் எப்போதும் நடந்துவருதற்குரிய மூலதனப் பெருக்கமும் நிறைத்துவைத்து, இத்தகைய உத்தமோத்தம சிவபுண்ணியப் பிரதிஷ்டாபகர்களும் பரிபாலகர்களுமாகிச் சைவசித்தாந்த சன்மார்க்க சற்சனசேவ்யர்களாய் வீற்றிருந்தருளினார்கள்.

இந்தப்பிரகாரம் ஸ்ரீமெய்யப்பசுவாமிகள் மதுராபுரியினெல்லைகடவாது வீற்றிருந்தருளித் தமது காலமுழுவதும் மனம் வாக்குக்காயங்கள் மூன்றினாலும் சிவகைங்கர்யம் செய்தமர்ந்த சிவநியமச்சிறப்பினாலும் நிர்மலாந்தக்கரண விசேஷ நிரந்தர சிவத்தியான ஞானயோக சீலத்தினாலும், தங்கள்காலமுழுதும் சிவவிஷயமாகவே செலுத்திவந்தார்கள்.

இவ்வாறு ஸ்ரீமெய்யப்பசுவாமிகள் முப்பத்தைந்துவருஷகாலம் சிவானுபூதிப்பெருஞ்செல்வர்களாய் நம்மனோர்க்கெல்லாம் சிவநியம நிதரிசன பூதர்களாய் இம்மதுராபுரியெல்லை கடவாது வீற்றிருந்தருளிக்கலியப்தம் சகூஅ௪ பார்த்திபஸு மாசிமீ ௧௫வ சோமவாரம் துவாதசிதிதி திருவாதிரை நட்சத்திரம் மிதுனலக்கினம் கூடிய சுபதினத்திலே அகண்டாகார சச்சிதானந்த சொரூப ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசரர் திருவடி நிழலிற் கலந்தருளினார்கள்.

இவர்களாற் செய்யப்பெற்ற திருமாலைத்திருப்பணி நியமமும், உண்மை நாயன்மார் குருபூசை நியமமும், திருநந்தனவனத்திருப்பணிமுதலிய பலவகைத் திருப்பணிகளும் மதுரைத் திருப்பணியாள

ராகிய வயி.நாக.ராம. வகையாராலும் ராம. மெ. வகையாராலும்நடை பெற்று வருகின்றன.

இவர்களாற் சைவசமயத்தில் சத்தியபுத்தியும் சிவபத்தியும் திராவிடவேத பாராயண சிவபூசாதி சிவநியமமும் சிவசாஸ்திரப்பிரக்ஞையும் பெற்றுச்சீடர்களாகும் பெருந்தவம் வாய்ந்தோர் நம்மனோர் பலர்.

நம்மையெல்லாம் தங்கள் சீடர்களாக ஒப்புக்கொண்டு நம்மையுய்ப்படுத்திய நமது குருமூர்த்திகள் ஸ்ரீமெய்யப்ப சுவாமிகளாதலால் குருவைத்துதித்தல் உத்தம சிவபுண்ணியமென்பது பெரியோர்கள் ஆணையாதலால் குருஸ்துதி ரூபமாகிய ஸ்ரீமெய்யப்ப சுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி யென்னும் இந்நூலை அறிவிற்சிறியனாகிய தமியேன் குருப்பிரசாத சித்தியின் பொருட்டுச்செய்தேன்.

## ஸ்ரீமெய்யப்பசுவாமிகள் சரித்திர சங்கிரகம்

3990

உ

கணபதி துணை

மெய்யப்ப சுவாமிகள்

# பதிற்றுப்பத்தந்தாதி.

## காப்பு.

ஓங்கருவா யுருவாகி யுருவருவா யுவைகடந்த வொருத்தன் கூடற்
றேங்கருவாய் பொற்கமலந் தேரிரவி பலகாட்டுந் தெய்வ வாவிப்
பாங்கருவா முகத்தனருட் சித்திவிநா யகற்பணிந்து பரமா னந்த
நீங்கருவாழ் வருள்வாய்மைக் குருமணிக்கிவ் வந்தாதி நிகழ்த்து வேனால்.

## நூல்.

மணியமர்பூந் திருமார்பன் முதலோர்க் கெட்டா வானவனை யாரறிந்தவ் வழிநின் றேத்துந், திணியரோமக் கியலாவென் றசாவு மும்மைத் திறன்மலத்தெம் மவர்க்கருளுஞ் செயலை மேவிக், கணியமர்பூம் பொழின்மதுரா புரியிற் பாலக் கனல்விழியு மணிமிடறுங் கரந்திட் டெம்போ, லணியமர வெழுந்தருண்மெய் யப்பநின்றாட் கன்பொருவா வின்பநிலை யருளுவாயே. (க)

அருமைமணி வரந்தெரிந்தோர் சுத்த தானத் தமைத்தருச்சித் ததன்பயனை யடையு மாபோ, லொருமையுறப் பன்னாட்செய் தவத்தினாலே யுனையிம்பர் வரப்பெற்ற வுலக மாது, தருமையுறு காரைநகரினுந்து வாத சாந்ததலத் தெஞ்ஞான்றுந் தகைந்து கொண்டே, பெருமையுறப் பெற்றுண்மெய் யப்ப நாயேன் பெறலரிய தவமில்வழிப் பெறுத லென்னே. (உ)

பெறுங்கசப்பி தென்பதினு முண்டு வாந்தி யெயினெவருங் கொள்ளாரென் பெற்றி நோக்கி, வறுங்கொடுமா யாவாத மதமுன்புக்கு மற்றதனை நீத்தருஞ்சைவத்திற் சார்ந்து, தெறும்பவந்தீர்த் தரு

ருநெறி சைவமென்றே தேற்றிடவு மெய்க்குரவ தெளியார் சில்லோர்,
ருறுந்தகையர் நெறிப்புகுதா ருலகத்தா ரந்தோ வூழ்செய்குறை யன்றி
யருட் குறையொன் றுண்டோ. (௩)

ஓதருமுன் மணிமேலாந் துவாத சாந்த வொண்டலமே நமக்கெ
ன்று முரிய தான, மீதொருவே மென்பதனை யால வாயி னெல்லைகட
வேமெனக்கொண் டியாங்க டேற, மாதொருபாற் சவுந்தரநா யகர்தம்
மால வாய்நின் றுபா ரகஞ்சிரிக்கு மகிழ்ந்து செல்லும், போதொருவா
தெல்லையள வுடன்போய் மீண்டு பொற்கூட லமர்ந்தருண்மெய்ப் பு
னித போற்றி. (௪)

புனைந்தகழு மணிப்பூணொன் றறிவி லாமண் புழுதிவினை யாடும
ழப் பொலங்கை யுற்றான், முனைந்தவினை யாட்டொழிந்தங் கதனைப்
பேணி முதமடையு மோரவதுபோன் முரட்பவஞ்சத், தினைந்தமை
யு மாயிருளும் பிரித்துநோக்கா திருளையாய்க் கிடக்குமெமக் கிரங்கி
யெம்போ, னனைந்தருளால் வந்தருண்மெய் யப்ப நின்று ணவியுமல
வலிதொலைப்பா னயந்தி லேமால். (௫)

நவையகன்று விதித்தபடி புனித வன்பா னுடிபெருந் தவரிதய
நளினத் தும்பர்ச், சுவைபெறுந் தண் கருணைமது வொழுக மேவிச்
சுத்தாத்து விதபோக மருளுநந் தோன்றல், பவமுழுந்து தவமிழந்த
பதிதன் காமப் பாழ்ங்குழியி னிடைவீழ்ந்த பதக னேனுந், தவர்பு
கழ்மெய் யப்பவிறை நீயே யானின் றுட்கமலக் கடியனரு டந்தாள்
வாயே. (௬)

தந்தையர்தாய் போயினூர் தந்தை தாயார் தந்தையருந் தவ்வை
யரு மென்று சாற்றி, முந்தைமறைப் பொருள்கோது முணிந்து தே
ற்று மூவருண் மொழிப்படியே முறையால் வந்த, தந்தையெலா ம
ந்த்துயர்கித் தியமாந் தாதை சங்கரனே யென்பதற்கோர் சான்ற தா
கப், பந்தமொழித் துயர்வீடு தரும்பேர் பூண்ட பரமகுர வணப்பணி
நெந்தம் பரிவு தீர்ப்பாம. (௭)

பரிவொடுவை கறையினிற்பொன் கமல வாவி படிந்துரிய நியதி
முற்றிப் பைம்பொற் கோயிற், றிருவனந்தன் முதற்காலந் தோறுஞ்
சென்று தெரிசனஞ்செய் தெண்ணில்வலஞ் செய்து போற்றி; யுரிய

செப தியானபூசாதி மேலு மலகின்மலர் தொடுத்தலின்ன வவனி தேர்ந்து, அரிசறச்செய் துயச்செயுமெய் யப்பனெம்மான் றுணைப்ப தங்கள் பரவிவினை தொலைப்பா மன்றே. (அ)

தொல்லைவினைப பவமுடற்ற நைந்து வாடித் துன்புறுமன் பினி யாய துட்ட னேனறு, நல்லருளோ யுருவாமெய் யப்ப வாழ்வே நலமி லியென் றிகழாது நயந்தாட் கொண்டால், வல்லறிஞர் பழுதுரைப்ப வழக்கொன் றிலலை மாற்சார சம்பந்த வழக்கி தன்றோ, வில்லமெனு விரவாமு னீத ருனே யெழிற்கொடைஞர் தொழிற்கழகா மெங்கள் கோவே. (௯)

கோவமருங் கருணைமது வொழுகுஞ் செய்ய குளிர்கமலத் தாம்பல்விரி கோலம் போல, வாவன்மிக வருட்டிருவாய் மலர்ந்து வாவென் றழைத்தருளித் திருத்தொண்டர் புராண மாதி, மேவருணூ லரும்பொருள்கள் விரித்தா யெநதாய் விமலமணி வாக்கடிகள் விளக்கும் வாய்மைப், பாவழங்கு கின்றுயென் பதன்மூற் பாதிப் பயன்பெற் றேறன் பிற்பயன்மேற் பாலிப் பாயே. (௧0)

## வேறு.

பாயவா ரிதியிற் கொடுவிட முதித்துப் பண்ணவர்க் கிடர்புரிந் தெனஙின், றாயசந் நிதியிற் றென்டரோ டணைந்த தோமறு தவத்தினே னகத்துத், தீயவெங் காம விடமுதித் தறிவைத் தின்றெழு கின்றதா லுண்மை,நாயக வதனை யொழித்தரு ளேனக்க நல்கியெற் புரப்பதென்ஞான்றே. (௧௧)

ஞாலதின் புகழே யாகவென் றமுத ஞானபோ னகருரைத் துயிர்கட், கேலுமப் பாதந் திரஞ்சுதந் திரனம் மீசனவ் வீசனே யிறைநாஞ், சாலுமன் னடிமை யெனத் தெளித்திடவுஞ் சாற்றலென் சழக்கர் தாம்பிரம, மாலமார் களத்தைக் களம்புரிந் தமர்மெய் யப்பனே யொப்பிலா வமுதே. (௧௨)

தேவெனப் பிறந்து பிறந்துழ லரியைத் திசைமுகன் முதலசிவ்வையான், மேவிடா துண்மைத் தேவதே மலர்த்தாள் விழைந்துமெய்க் கதிபெறற் குரிய, காவதோர் சுத்தாத் துவிதநன் னெறியே யவ

லினை னடைந்திடப் பணித்தாய், தாவிலா வருளா லுருவுகொண் டருண் மெய்த்தாதையே தமியனேன் றரமோ. (௧௩)

தத்துவ மசிமா வாக்கியப் பொருளை தந்திட முப்பொருளுண் மை, சத்துவர் வீண ரொன்றென வதனைக் கனவிலுங் கருதிட லஃ தான், நித்தனை யிலர்பா லணுகினு மருர்மூற் றெய்திடு மெய்தலென் றிசைத்த, சத்திய பிதாவின் றிருவடிக் கமலந் தமியனேன் றலைக்க ணி யாமால். (௧௪)

அணியதா வறிவு மடக்கமும் பொறையு மைம்புல னெறிச் செ லா மனமுந், தணியபத் திமையுஞ் சிவார்ச்சனைச் செயலுஞ் சிவாக மா திபசிவ நூல்கள், கணியமை நெல்லிக் கனியினேர் துள்ளங் கச டறத் தெளிதலும் விளைந்தேன், றணியபூம் பொழில்சூழ் கூடலின் ற் றிருக்குஞ் சத்தியத் தந்தையாங் கருளாய். (௧௫)

அருளினு கரமே யிருண்மலக் கிழங்கை யகழ்ந்தவ ரருந்துமா ரமுதே, தெருளகத் தறிவாந் திரியிடை நேயஞ் செறிந்திடத் திகழு மெச் சுடரே, பொருள்விரித் தருணூல் வரையறுத் துணர்த்தும் பு னிதமெய்த் தாதையே நின்பாற், கருளகத் தொழிந்தாங் கொளியுற ப் பரவிக் கையடை புகுந்தனன் கடையேன். (௧௬)

கடைப்படு பிறவி பற்பல பரித்துக் கழிந்தபின் பெற்றமா னுட மீ, திடைப்பல துயர்நீங் கெல்லையுந் தெரியா விந்தநின் னடியெவன புரிந்து, னுடைப்பத மடைதற் கெம்பதுய்த் துணரா துழன்றன னிம் மனை வாழ்விற், றடைப்படி லெவனோ வுய்குவன் றுவாத சாந்தமா தலத்துமெய்த் தனியே. (௧௭)

தனியர சமர்ந்து புரிதலு மயன்மால் சசியிறை பதங்களு மொ ருவாத், துனியவா மதனாற் சுகமென நாடித் தூண்டில்வாய்ச் சலசர மாகேன், கனியுமன் புடையார் நின்னடித் தொண்டர் கழகஞ்சேர்ந் தவர்பணி யேவற், கினியனு மொழுகு மதனையே யருண்மெய் யப்ப னே யெனக்கினி யாளே. (௧௮)

எனக்கெனச் செயல்வே றில்லைநின் செயலே யாவையு மன்னன மாக, வெனக்கெனச் செயுநா னெனலது விபமா விரும்புவிப் பிறந்து

ழல் லின்றேன், கனக்குழா மெனவா குஜிப்புகை நோக்கிக் களிமயி
லகவிடக் குவளை, வனக்கணைக் குணர்ந்தாங் கிதழிபொன் சொரியு
மதுரைவீற் றிருக்குமெய் மணியே. (௧௯)

மணியினி லொளியின் மறைந்தெம தகத்தே மன்னிவீற் றிருப்
பவுங் கழுவி, மணியினி லொளிகாண் மரபினுள் ளன்பாம் வளர்கடை
கோலியைத் தறிவாந், திணிகயி றதனாற் கடைந்துகாண் கிலலாச் சி
றுவரேம் பருவமோர்ந் தெமர்போற், றணிவில்பே ரருளாற் போந்த
னை யான்மெய்த் தாதையாங் கருள்வதுன் பரமே. (௨0)

## வேறு.

பரவிடா ரடிமை தாமாப் பசுபதி தமக்கு மேலா
யொருவனுண் டென்று ரத்து விதபதத் துண்மை நோக்கார்
கரிசர்நாம் பிரம மென்றே கழறுவ ரிவர்தம் பாவ
மிரியுமோ வாலவாய்மெய் யப்பவெம் மிறைவ னேயோ. (௨௧)

இறைவனீ யடிமை யாங்க ளென்பதற் கைய மின்று
லறைவதெ னெம்மை முற்று மளிப்பதுன் கடனு மன்றே
யிறையுன தடித்தொண் டாற்றி யிருப்பதெங் கடனே யாக
வறைபுனற் கூடல் வாழ்மெய் யப்பனே யருள்செய் வாயே (௨௨)

வாயில்சேர் மனத்தர்க் கொண்ணு மணியினை யால வாயெந்
தாயினு மினியான் றன்னைச் சத்திய பிதாவை நாளுந்
தூயமா மலரிட் டேத்தித் தொழுமடி யவர்க டம்மைத்
தீயசூழ் வினைவந் தென்னே செய்திடக் கடவ தம்மா (௨௩)

அம்மையோ டப்ப னீயென் றனைத்துள சுற்ற மாவார்
தம்மையோர்ந் திழந்து வாழுந் தளிப்பெருந் தொண்ட ரென்று
மெம்மய நீர வெண்ணி யிந்நெறி யொழுக நல்காய்
செம்மையா ரால வாயிற் றிகழுமெய் யப்ப தேவே. (௨௪)

தேவரு முனிவ ராதித் தீரரும் தெரிந்து போற்ற
நாவெழா நினது வாய்மை நலமிலே னுணர்ந்துன் பாத
மேவுற லருமை யான்மெய் யப்பனே வினையி னேன்பா
னீவிழைந் தருடி யால வாயுற்ற நிமல வாழ்வே. (௨௫)

வாழ்வெனக் கிதுவென் றெண்ணி மனைவிதாய் தந்தை மக்கள்
சூழ்தம ரின்னோர் வாஞ்சைச் சுழல்வளிக் கொடியோன் றுகி
மாழ்குவேற் குனது பாத மலர்க்கொரு கொம்பு நல்கி
யாழ்துய ரகற்றி யாண்மெய் யப்பனே யருளின் வைப்பே. (௨௬)

வைகலு மடநல் லார்கண் வலையுறீப் பணைத்த கொங்கை
மொய்களி றெழுந்து தாக்க முதுக்குறை வின்றி மாள்கி
னைகுவ தழகோ கூட னண்ணுமெய் யப்ப னேயர
னுய்குவ தெவனீ வாளா வுற்றிடி னுணர்த்தி டாயே. (௨௭)

உணர்வரும் பொருளே நீக்கண் ணொளித்தெதமர் போல வந்து
பணையுறா சுறங்காக் கூடற் பதியமர்ந் திருந்த பான்மை
யுணர்வுறுச் சகல ரேமை யுய்யக்கொண் டருளா வன்றோ
வணைவுற வருளாய் வாளா வமர்தியா லிஃதென் னேய. (௨௮)

ஐயனே யரசே கூட லரும்பெற லமுதே தோற்றும்
வெய்யநோய் மருந்தே பாச விமுத்தமெய் யறிவா னந்த
மெய்யமெய் யப்ப நாத விழைந்தநிந் தனுகு மாறில்
கையனேன் புலப்பு தீர்ந்துன் கழல்புகக் கருதி டாயோ. (௨௯)

கருதுவார் கருத்தி னூறுங் கழிசுவைத் தெளிய பாகை
முருகுவார் பொழில்சூழ் கூடன் முதுபதி யடைந்து போற்றி
யுருகுவார்க் கமுதை யுண்மை யப்பனை மொப்பி றேனைப்
பருகுவார்க் கலது சென்மப் பசிப்பிணி தொலைய வற்றே. (௩0)

## வேறு.

தொலையா வினைசம மலபா கமுறு தொடர்பா ரடியவ ரிடையேகா, நிலையா யருள்புரி தலையே முறையென நினையே லதுகொடு பரவாதுன், னுலையா வருள்வழி கவினர் கொளலென வுனதா ரருள்பெற வெனையாள்வா, யலையார் புனனிறை மதுரா புரியின்மெ ய்யடிகே ளனைவரு மறிவாரே. (௩௧)

அறிவா ரறிவரு மருவோ வுருவமு மலவா யருவுரு வமுமாகா, நெறியா யினையினை யெவ ரென்றுருவமென நிகிலா கமமுறை யுணரா தே, வறிதா குவரிவர் சிறியா ரெனவுனி வவிதா ரருளினெம் வடிவே

யாய், வெறியார் பொழின்மது ரையில்வாழ் வரியமெய் விமலா வரு ளெனன் மிகையாமே. (௬௨)

மிகநீ டியவினை புரியா முனமதன் வினைவா லவனியின் மிசைவா ரா, விகவாழ் வலதருள் பெறுமா றெறியுற விலனு யலைவுறன் முறை யேயோ, வுகவா ரிதியென மடவார் வெருவிவி னுறுமா ளிகையுற வடியாரோ, திகவா வரவொலி மிகுதூ ரியவொலி யெழுமா மதுரை மெ யிறையோனே. (௬௩)

இறைவே றிலெனமி லகமே பிரமமெ னிவர்சா தனமெனவொரு நாலே, லுறுவா னவைகொடு பெறுமா வுளகுறை யுவர்பா லுறலெ வன் முராணுமா, விறைமேவ றவனருள் பெறுவா னவைசெய விருவி மா மலசகி தர்களானமா, நெறியே யிதுவென வறிவா னருளுமெய் நிமலா மதுரையி லுறைவாழ்வே. (௬௪)

உறையார் விழியர்பு னகமா ருடனமெ யுளமா ரழல்படு மெழு காவா, ரறைதே லுகரித ழியனே பரமென வரியா தியர்பசு வென வோரா, வுறையா வழிபடு மிவரோ டேனுறை வொருவா வகைதின மருள்வாயோ,கறைவா யளவிடு மெயிற்சூழ் நகரெலை கடவா தமர்தரு பெருமானே. (௬௫)

பெருவா னகடுற வளரா வமர்பொரு பிறரா னிகழ்துய ரணுகா மே, தருவா னவரிடு மரணு மெனவுனை தருகா மதுகரி மதமோடே, வருமே கவதிவி ணதிவா ணியமுனை வரல்போ லொழுகும துரைவாழ் வோ, னருள்வாய் மையனைமை யுடையான் மலரடி யடைவா ரிரு மையு முடையாரே. (௬௬)

உடையா வவியினர் புரமூ வருமெரி யுறுநா ளழிவிலர் பெருவா ழ்வே, படையா மருவின ரெனவோ ருதிபல பலவா றுழல்வதென் மனமேநா, மிடையா தருள்பவன் மதுரா புரியின னிசைவாய் மைய னைமை முழுதாள்வா, னடைவா யவன்முன மயராய் வழிபடி னதி ரா வருதுயர் பிதிராமே. (௬எ)

பிதிரா டகமென வருமா யையினிடை பெயரா துலகமி தெனு னுமே, முதிரா வறிவர்பி ரமமே முதலென மொழிவா ரதமுரனை

ணவோர்வா, னதிரார் கவியென மறையோ தியகிடை யவையோ தறு
கிளை மிகுவாரோனோர், வெதிரா யிடமொழி மதுரா புரிமரு வியவாய்
மையனரு ளினன் மாதோ. (௩௮)

இனன்மா விழிவழி யுணரா வகையொழு கினதே னிறைதனி
னிறையாளு, னெனவோ துறும்வகை யவிரு வொளிர்தரு மெழிலார்
பொழின்மது ரையில் வாழ்வோ, யனகா நிறைகுண வதுலா வறிவர்
களதிபா வடியமெய் யுணர்வேயா, னுனதா ரருள்பெறி னிவையா
தியதுய ருறுமா வரினும தினிதாமே. (௩௯)

இனியோர் செயற்பிற முயல்வான் விழைவதே னிறவா நலனுற
லெளிதாமீ, துனியாய் மலர்கொடு மதுரா புரியின்மெ யுறுதா தையி
னடி பணிவாய்நீ, கனிவாய் மலர்விக சிதனு யருள்விரி கமலா னன
மொடு கனிவோடே, யினிதா முறுவலொ டெமைவா வெனவரு ளி
யவா சகமுன மறியாயோ. (௪0)

## வேறு.

அறிவ தறியே னறிந்தார்த மகத்தும் புகுதே னவர்கூறு
நெறியு மொழுகேன் பொல்லாத நிலையில் வாழ்வை மெய்யென்று
வறிதி னுழல்வேற் கரணுகி வருந்தல சிறுவ வெனவுரைத்தாங்
கறிவை யருளு மெய்த் தாதை யருளின் றகைமை யளக்கவற்றோ ()

அளக்க வரிய தீவினைத்தென் றறைவ தறிந்தும் வறுங்காம
வளக்க ரிடைப்பட் டாயிழையா ரலைப்ப வவர்கட் கொலைவேலும்
பிளக்க விணைத்த தடங்கொங்கைப் பிறங்க ருமு மீதாழ்ந்தத்
துளக்க முறுவேற் கருட்புணையின் றருளா யுண்மைத் தூயோனே ()

தூயா ரமுதே பவக்கோடை தொலையக் கருணை பொழிபுயலே
பாயா வாயி லொருசேரப் பருகற் கினிய பசுந்தேனே
யோயா தருளுந் தூமணியே யுலவாத் திருவே யெனவோதி
மேயார்க் கினிய மெய்த்தாதை யிரைத்தாள் பரவ வினைபோமே. ()

மேனுள் வினையாற் பலபவங்கண் மேவி யுலைந்தேன் பெறற்கரிய
வாறு மகிமை மானுடமீ தரிது வாய்த்து மதனருமை
யானுய்ந் துய்யு நிலைவிரைந்துற் றிறுகப் பிடியா துலைவேனே
னூனூர் பிறவி யொழிந்தின்ப முறுவ தெவன்மெய் யுரவோனே. (௪௪)

உரகப் பருவாய் மண்டூக மொப்பக் கொடிய மடநல்லார்
விரகிற் றுயரு மஃதன்றி மெய்ம்மைக் குரவ ரீளாத
நரகத் துயர்க்கு மிலக்காகி நையக் கடவே னுய்யும்வகை
வரகட் கருணை தாராயேன் மாறாப் பிறவி தீராவே. (௪௫)

தீரத் தெளிந்தோர்க் ககத்திரியிற் றேங்கு மருணைத் தோபத்தறிவே
யாரச் சுடரிட் டருள்புரியு மதனி லறிவு சிறிதுமிலேற்
கீரக் கதலித் தண்டினழ லெரியக் கொளுநூ லெனவருளின்
வீரத் தகையை விளங்கிடுமே மெய்யப் படிகே ளுலகமெலாம். (௪௬)

உலகெ லாமுஞ் சைவநெறி யோங்கப்பொலியத் திருவுளங்கொண்
டிலகு மருளே திருவுருவா யிணையில் வினையேன் போல்வாருங்
குலவு கருணைப் பெருவெள்ளங் குளித்துக் களிக்க வந்தருளும்
பலரும் வணங்கு மெய்த்தாதை பதமே புணையாப் பற்றுமினே. (௪௭)

பற்று நீக்கிப் பலகலைகள் படித்தாய்ந் தறிந்த நித்தமுணர்ந்
துற்று நோக்கி யுண்மையிதென் றுறுதி கோடற் குரணில்லே
னற்ற நோக்கிக் களைகணின்றி யலைவார்க் கருளுந் தொழிலோய்நீ
குற்ற நோக்கா தருளுதிசெங் கூடல் வாழ்மெய்க் குலமணியே. (௪௮)

மணியே யியன்மெய்ச் சங்கமரீஇ வளரு முய்மைத் தமிழ்க்கூடற்
கணியே யருண்மெய் யப்பவடி யடைந்தார்க் கவலைப் படுபிறவிப்
பிணிநோய் தீர்க்கு மவுடதமே யின்று தளிக்கும் பெருநிதியே
பணியே னுனையன் றொருவரையும் பரமா வருட்கண் பாராயே. (௪௯)

பாரா திபர்பேர்ந் தறிவு கெடும படிசாங் கியப தான்புறிலு
நீரா ரிதழி முடியோனை நிலவும் பதியென் றுணர்ந்துள்ளம்
போரா நிலைமை கொண்டன்று பெற்ற நிலைமைக் குறுநெறியின்
வாரா துலைதற் கென்செய்கோ வாய்மைக் கருணை வள்ளாலோ. (௫௦)

வேறு.

வள்ளை வார் குழை மாதர் மயற்படிந்
தள்ள லார்கய மாயனை யாதுநீர்
விள்ள லாதமெய்ப் பேறு விழைதிரேற்
கள்ள மின்றிமெய் யப்பற் கருதுமே. (௫௧)

கரிய கண்ட கபாலகங் காளமாற்
கரிய வீசமா தேவ வரவென
வுரிய நாமத் தளவினி லுண்மைநாந்
தெரிய நல்கினன் மெய்யப்ப தேவனே. (௫௨)

தேனி னேர்மொழி யார்கட் டிளைத்தவர்க்
கூறு மாகி யுடலு முதவிமெய்ஞ்
ஞான மின்றி நடலைப் படிலவ
மான தின்னதே வள்ளன்மெய் யப்பனே. (௫௩)

அப்பி லக்கர மாக்கை யலைபொருள்
புற்பு தத்தினிற் பொன்று மினமையென்
றெய்ப்பில் வைப்பெமை யாளுடை யீசன்மெய்
யப்ப னென்றடை வார்வினை யாசறும். (௫௪)

ஆச றுத்தெமை யாளுமெய் யப்பனைப்
பேசின் மெய்க்கதி பெற்றிட லாம்பல
யோச னைக்கொ டுழிதரு மூமர்கா
ளாசை யிற்கடம் பாடவி யண்மினே. (௫௫)

அண்ணித் தன்ப ரிதயத் தமருமுக்
கண்ணிக் கென்ப கடம்ப வனத்துமெய்
நண்ணித் தொண்டர் குழாத்தி னடுவுறு
மெண்ணித் தொல்வினை பாற்றற் கெழுமினே. (௫௬)

எழுது சித்திர மொத்திரண் டிற்செலாச்
சுழனை யுற்றெலி யோடுபோய்த் தொல்லுருத்
தொழுதி ருத்தற்குத் தாரிய னென்செய்கோ
வழுதி ருப்ப னருடிமெய் யப்பனே. (௫௭)

அப்பி னுக்கர மங்கைய ரட்டல்கண்
டொப்பில் வானர சாதலி னுண்மைத்தே
யுப்பின் றட்டகூ மேற்றுண் டுறைதன்மெய்
யப்ப னாரு ளோட்டம ரப்பெறின். (௫௮)

பெறுவ தொன்றுமெய் யப்பயான் பேழ்கணித்
திறுதி யுற்றுமே வீண்டுறி வீசனே
யிறைவன் மான்முத லோர்பசு வென்றுகொ
ளுறுதி நீங்கா வுணர்வோ டுதித்தலே. (௫௯)

உதவி யோதன முண்பியா வாறுபோ
லிதழி வேணிய னேபர மென்றுண
ரிதய நல்கினை யிந்நெறி நிற்பியா
யதனை யாவர்மெய் யப்ப வருளுவார். (௬0)

## வேறு

அருவி னைப்பல பிறவி புக்குழ லவதி யிற்பட வடைதிராற்
செருவி னைப்புரி யிபமு ழக்கொலி செவியு றச்சிகி யகவநேர்
மருமு தக்கமழ் முலைந கைத்திட மலரும் விற்பொலி குமுதம்வாய்
பொருவி லற்புத மதுரை யிற்பொலி புகழ்மெய் யப்பன சரணமே.()

சரவி ழிப்புய னெறிகு ழற்பகு சசிநு தற்கிரி முலையினார்
விரகி னிற்சுட ரழலி டைப்படு மெழுகெ னக்கரை யுளமிதே
யிருமை யிற்பய னுறவெ மக்கரு ளொழிவி லாத்திடு கருணையாய்
வரமெய் யப்பநின் மலர டிக்கணின் வலிய கற்குறழ் மாபெனே. ()

மாபி னிற்பல கலைகள் கற்றுமென் வடிவி லெற்பெழ வகைவிலா
தரிய நற்றவ நிலையி லுற்றுமெ னவனி முற்றவு மழியுநா
ளுரிய வெற்பின மொடுலை வற்றுளி ருமக முற்றெயின் மதுரைவா
யருள்மெய் யப்பன வடிக ளற்பொடு மகமெ கக்கரு தலர்களே.(௬௩)

அலர்கொள் பைத்தொடை வழுதி முற்பக லவனி யைப்புய மணியுநா
ளிலகி ரத்தின படமி யைத்தென விருபு றத்துகு மலர்களா
னிலவு பப்பொடு விரைந திப்புன னிமிர்செ லற்புத மதுரைவாய்ப்
பலர்வ ழுத்துபு பணிமெய் யப்பன பதம னக்கொடு பரவுவாம் (௬௪)

பரவை யிற்புனல் சுவற வுட்செறி பரிமு கக்கன லெனவெறு
தருவி னைத்தொகை முழுதடக்கிந லறிவெ ழற்கினி தருளிறு
விரவை யுற்றதி மதுரையெ னக்கணி யிணரு குத்துள கொடையினர்
தாமு ணர்த்துமது துரைமெய் யப்பவி சமல முற்றறும் விமலமே.(௬௫)

விமலை மெய்த்தளி முனமர் பைக்கிளி வீருமை யக்கர மவையொடே
சுமைகொ ணத்திசை பிரண வத்தொனி சுவண பத்மினி முழுகுவோ
கமைய நற்குரு மொழியி னற்பொடு மருள்வ ளப்பதி யமருவோன்[ர்க்
விமல வத்துவி தபத வுட்பொருள் விரிமெய் யப்பனை யடைகுவாம்.()

அடைய வர்க்குள முரண ழித்தர சியனி றுத்துபு திறலினோர்
குடைநி ழற்புவி ககள்வ ளர்த்தருள் குமரி முக்கணன் மகனுமாண்
படைவு றத்தனி யரசி யற்றிய வதிம கத்துவ நகரினு
ளுடைமெய் யப்பன முளமு றத்தம முடன்வி டைக்கொடு நடவுமே.

நடலை பற்பல தருபி றப்பிவை நலித ரச்சுழ லுறுவதே
னுடலெ டுத்துழ றுயர கற்றிமெ யுறுதி பெற்றிட வருதிராய்
கடையு கத்தினு மழிவ றத்திகழ் கடிநி பத்தனி யடவியாம்
புடவி யிற்சிவ பரமெய் யப்பன புதுவி ரைக்கழல் புகுதுவோம். ()

புகைய னற்புனன் மிசையு தித்திடல் புதுமை யக்கன விடையிலே
வகைய சொற்கரி கரமெ டுப்பொடு மறைவ ளர்சசியி தனின்மே
தகைய வற்புத மெனவ ளிச்செறி தருமை ரைக்குல வயல்கள்சூழ்
மிகுவ ளத்தம துரைமெய் யப்பன விரைம லர்க்கழல் பரவுவாம். ()

பரம தக்கரு ளறவ ருட்செறி பரவை யுற்றெழு பரிதிநீ
ளருளு மெய்ப்பதி பசும லத்திய லறையு மத்தொகை மலமொரீஇ
விரவு சத்திப திதலை யுற்றுறும் விமல முத்தியி னியல்பெலா
மருண்மெய் யப்பவெ னிதய பத்மமெ னலரு வித்திலை முறையிதோ.

## வேறு

இதமருவ வருட்கையினாற் றத்துவசோ பானத் திலங்குபிரை நலங்கொளுவ வேற்றியருண் முறையு, முதமருவு வானிரங்கு முயி, ர்க்கருள மீளு முறையுமுணர்த் துவகடுப்ப முதுமதுரா புரியிற், சித முறுகோ புரமேறி யோவர்வினை திருத்தித் திகழ்பொறியாற் புகழ் முதனூற் செம்பொருடேற் றுபுநீங், கதமுறுநன் மணியொலிகேட் டிறங்கியா லயம்புக் கருண்மெய்யப்ப னடியடைந்தா ரவல்மொழித் தவரே. (எக)

அவனியிடை யாசிரிய ரறிவுடைமா ணவர்க்குக் கருமையிலா
பொருளகத்தி னறிவுறச்செய் திடுவார், தவமுனிவர் புகழ்பரம ச
குருமெய் யப்ப சாமி திருத்தொண்டர்புரா ணார்த்தமுலகின் ற,சிவை
மகிழா லயமதிலிற் புறக்கண்ணி னலுந் தெரிதுலகர் சிவமடையு
திறதெளிது தெரித்தா, ணிவன்பகிமை பொருவாது பல்லூழி யவ
நத னிசைந்தாறு பளக்கலுறு மியற்கையின தாமோ. (எஉ

இயற்கைபுணர் வினாறுபான் மூவருமுன் னுளி னிரும்பணிக
பலதலங்க ளிடையியற்றி யீச, னயத்தகுபூங் கழலடைந்தா ரின்னு
னெருங்கே நகரிதனி லோரிடத்தே நணுகியவர் தத்தம், வியத்த
மற் புதசரித நிகழ்ச்சியொடுங் காண மேவவெலவ னென்றுகண்ட
விளம்புறச்செய் செயலாற், செயற்கரிய செய்வரெனு மறைப்பொ
டேற் றியமெய்த் தேசிகனைப் போற்றிவரு தோற்றமது தீர்ப்பாம்

வாயில்பர நாமெனமு னயன்பால் சொற்றத
ஆன்பமிகை யோர்ந்துஞ், சாற்றுவரப் பாமுடலிற் ப
கடத்தி றயங்குமஃ தொழிந்திலையோன் றென்பரந்த ம
யோ, வேற்றகடத் தினிற்பலவாய் மான்றுகண்ட தயலோ ரிவர்க்
டன்முற் றோன்றியதெங் கென்றுணரி னநாதி, தேற்றுபதி பசுப
மூன்றுமென வறிவான் செப்புமெய் யப்பனுண்மை தெளித்தரு
செய் தானல். (எ

தெளிவுறநான் காச்சிரமஞ் சேர்ந்துலக முய்நூல் செப்புதரு
மேற்கொண்டு தெளித்தருளு முளத்தா, லளியமரும் பொழிற்கா
நகரிடைமுன் னிரண்டு மடுத்தநெறி சமிவனத்தி னமர்ந்திருந்து
ற்றி, விளிவரிய புகழ்மதுரா புரியிடைமெய்த் துறவே மேவியுமெ
போனடித்த விதத்தையுண ராதே, யளியுறுமெய் யப்பனைமா ல
னென்பா ருண்மை யவருரையுஞ் சிவனெனவே யறிவுறுத்த தன்

அறிவரிய பரசீவ சகமூன்று மித்தை யநாதிநித்தி யம்பி
மொன்றேயென் றோதிப், பிறிவருங்கூ டத்தனென்றோர் பொரு
தென் பார்மெய் பேசுமுன்னா லுய்த்துணரார் பிரமமென்ப தே
னறைபரங்கூ டத்தனவ்வான் மாசகமா யையினு லாகுமிதோர்ந் து
மூன்று மநாதியென வோர்வா, னிறைவனெனமைப் புரக்கவெமர் ே

றுளா ஆருக்கொண் டெழுந்தருண்மெய் யப்பனெமக் கினிதியம்பி றால். (எ·)

இயங்குசல தாவரனைக் கண்ணுற் றிந் தோகை யிணர்தொடை றுடறாத் திடைமருவி முன்ன, ருயங்குதுய ரொழித்தமர்ந்து லதயிலத் தியாண்டு மொருவாது வீற்றிருக்கு மொளிவடிவே லெங் க, யியம்புவரக்கொவ் வாதகுற மாதுகயங் கண்டாங் கெழின்மேனி ரீஇமருவு மியல்பதனைக் காட்டுந், தயங்குவளத் தமிழ்மதுரா புரிய மெய்த் தாதை தாட்கமலம் வேட்கமல நீக்கமுறுமன்றே. (எஎ)

அன்றியெமைப் பலபவத்தி னடரும்வினைப் படர்நோ யலக்க ற நலக்கணரு ளளித்தருளி மேலும், பொன்றுதலில் சிவானந்தப் ருவாழ்வு தருவான் புகழுலகு திகழ்மெய்யப்ப புனிதனெமக் கினி , னன்றுணர்வீர் நமராங்கா ணடலேதரு மிடர்நோய் நலிவுறவுண் லிவுறலென் றும்வறிது கேண்மி, னென்றுதவழ் நான்மாடக் கூட டந் தேயவ் விறையடிக்கீழ் வரங்கிடப்போம் விரைந்தெழுதி ரா (எஅ)

எழுதுகொடி யிடைமடவார் வான்றருவிற் சூழ வெறிகழங்கைப் றியளியென் றேங்கியுளம் வாடுனோர், பழுதுநணுகிற் றுலெம் பத ணுக்கென் றோதும் படியோங்கு மணிமாடத் தமிழ்க்கூடற் பதி , றெழுதகைமெய் யப்பனடித் துணைபரவிப் பணிந்து துன்பமொ யின்பமுறத் துணிந்திலையான் முற்று, மிழிதகைய மடவார்குற் வல்புரிக் துராமே யென்புகறித் திடுநாயின் மகிழ்ந்தனையீ தென் (எகூ)

என்செய்கோ வொருதமியே னேன்றுகொள்வா ரின்றி யிடர்ப் பில் கடைப்பிறப்பி னெண்ணிறந்த காலம், புன்செயலே புரிந்துண் போதமுறா துலைந்தாற் பொய்யாத மெய்வாழ்விற் புகுந்திடுமா வை, துன்செயலே களைகணிலார்த் தாரிஇயருளால் வாளா வுற்றிடி ன் பற்றுவா ருனையலதிக் குண்டோ, மின்செய்பொற்ற மறையடி புடமிடுபொன் போன்மெய் மிளிர்மெய்யப்ப பவக்குழியின் மேனு ப் லெம்விடே (அ0)

## வேறு

விடமுறமுழு மைக்க ணங்கை மாளா யணுகியவர் பக்க னின்று யூல்கொள் விதமினிய சொற்பு கன்று மேலை விழைவோரா, தனை வுதவி ரற்ப வின்மை நாடி யகமுழுது முட்கி நொந்துவாடி யவதியுத விட்ட விஞ்சு பாவு விதியேநீ, கடிகிபவ ளத்தி னின்று மேணி யெரு ருவறவ சித்தொ ழிந்தி டாத கதியருள்மெய் யப்ப னெந்தை பாத முளமீதா, லடரிய வெற்றி கொண்டு மேவ லினியரிது விட்ட கன்று மீள்வ தமையுமென வுய்த்து ணர்ந்து போரா தழகாமால். (அச)

அழனடுவ ணற்பி னின்று வேனி லிடைமுகின்ம ழைப்பெய் கின்ற காலை யசலமுற வுட்பு குந்து வாவி யதனூடே, யொழுகுபனி யிற்ற ளர்ந்தி டாமல் வெறுவெளியி லுற்ற ருந்த வோவி யுடன்முழு து மெற்பெ ழும்ப நீர்செய் தவமீதே, ணழிவறுத வத்தி ரிந்த வாப் மை யகமுறம திந்து ணர்ந்து கூட லமர்தருமெய் யப்ப னைக் ஞான னிடையேகா, வழுவறவ முத்தி யன்பி னேடும் வழிபடல்பி ணித்தி ருந்த மூல மலமொருவி நித்த வின்ப வாழ்வு பெறலாமே. (அஉ)

பெறலரிது சொர்க்க மென்று நாடி விதியின்வழி முத்த கங்கி தேவர் பெறவவிவ ளர்த்த ஙந்த காலமுழல்வீர்கா, ளமைசிவ னடிக் க ணின்ப லாது பிறபொருட மக்களந்த வாயு ளனுகுதலு முற்ற ழிந் து போத றிணமேயா, முறைமையிதனைத்தெ ளிந்து நீவிர் பலமுறை செ னித்தி றந்திடாத முதமருணை நிக்க னின்றுவாழ்மி னெனை வோதர், வறிவருண்மெய் யப்ப னெந்தை பாத நிழல்விரிம னத்தர் புன்க ணீடு மருவினைவெ துப்பொ ழிந்து சேர்வர் பெருவாழ்வே. ()

பெருவரைபி ளப்ப வந்த வேமுமுகில்பொழிம ழைக்கு டைந்தி டாது பிறைமுடியி டைக்கி டந்த நாலு பெயலேகா, வொருவறமொரு க்கு சந்து வாயின் மயிர்நுழைவ றக்க விந்து மேன்மை யெடுகுழு லெ னத்தி கழ்ந்த கூட னகர்மேயான், மருண்மலவ முக்க கன்று போக வருளறன்மு ழுக்கி யங்கி ரீயென் மடியிருவிநித்த வின்பமாகு மமுதீயா, வருசகல மைப்பு ரந்து தாயின் முறைதெரிமெய் யப்ப னெ ந்தை பாத மலர்முடியி சைப்பு னைந்துளோர்தம் வினைபோமே.[அச]

வினைவழியெ மக்கு டம்பை யீச னருள்வதுகு ருக்கண் மூன்பி
றனம் விரிமலமி ரித்த மைந்து சால வொருதாறு, னொனுமுணர்வை
யிட்டி ருந்து வாழ்வெம யருள்விரவுதற்கி தின்றி வீணி விடர்தருவி
னைப்பு ரிந்து மாய்வ தழகாமோ, சினமுறுப கைக்கொ ளுங்கை வாளி
னதுநனிசெ குத்த லன்றி யேவர் திரடமபு யத்த ரிந்து வோர்க
ளுரையாய்நீ, மனமிறைய றத்தெளிந்து கூடல் வளநகர்மெய் யப்பன்
மூன்பு மேவி வழிபடவி ழைத்தி யென்சொ லீது மறவாயால். ()

மறைசொல்பிர மத்தை யன்றி யேது முளவலவெ னப்பு கன்ற
பாவ மருவுயிர்த மக்கு வம்பி னேது மவர்நாமே, நிறைபரந மைந்த
விர்ந்து வேறி லெனவுரைபி தற்றி மூன்பின் மாறு நிலைகொளவு ரை
க்கி ரண்டு நாச முளவாமா, றறைசொலின் வி ளக்கி யந்த கார மக
மூறநெ ரிப்பர் நன்று வாய்மை யறிகிலர்ப திக்கு ளைங்க ளோர்தி யுண
ராதே, யுறைபசும தக்க ரென்று தேற வுரைத நிலைய யபப னுன்
றி னுலெ முளமணிய ழுத்து செம்பொ ருமி துணர்வீரால். [அசு]

உனைவுறநெ ருக்கி யுட்ப ொறி மனையுறவி டர்பப டிநது சூழு
மூடனழை வர்க்கி ரங்கி யேது முணராதே, பிணைவுறுந ரப்ப விழ்ந்து
வாயி னயலவர்ந னைத்த பஞ்சின் வாரி பிரிவிலர்மு னட்டவுண்ப தே
னுமிசையாதே, யினையுறுத மிட்டி ரங்கள் கூடி யுணர்வழிவ ருத்த
மிஞ்சு வேளை யெழில்வளர ருக்க னந்த சோடி நிகராவோர், பிணை
மறிம ழுக்க ரம்பைஞ் ஞீல களம்விரிச டைக்க ணிந்து மேனி பிரிவ
றமெய் யப்ப வென்க ணோர வருள்வாயால். [அஎ]

அருமைநவி ன நிக்க ணின்றி டாது கொடுவினைப லப்பு ரிந்த
பாவி யடர்மினிவ னைத்த கைந்து பாச மதனுலே, முரிபடவி றுக்கி
யென்பு மோதி யுதையுமினெ னச்சி னந்து சேரு முரணிமப டர்க்கு
டைந்து சோர்த லனுநாமே, வரிகொள்க மலத்த மர்ந்த கோடு நியதி
கண்மு டித்தெ ழுந்து பார மருவுறுத வர்க்க ருந்த வியு மணநேராம்,
விரிதடமி கட்பொ லிந்த கூட னகரமர்மெய் யப்ப நின்பொ னேயும்
விரைமலர டிப்பு குந்து வாழ நெறிதாராய். [அஅ]

நெறிகுழுன்ம ணத்தை யன்று கீர னியல்பலசெ யற்கையென்று
கூறி நிலைகெடவி லக்க வந்து தானெர் புலவோனு, விறைவன தியற்

கையென்ட சோதி மிடியுளகுருக்கன் மைந்தனோ விலகுபொன்மு
டிப்ப ரிந்த தீயு மதனோடே, நிறைமிகுகு ரத்தி யென்மெ னுமன்
முதுமகன்ம னைப்பு குந்த பாவி நிலையழிய வெட்டி யங்க நீதி பிறழா
மே, நிறுவியம கத்து வங்கொள் கூட லமர்தருமெய் யப்ப னன்றி
யார்கொ ணிமிர்துபர கற்றி யின்ப மீயு மளியோரே. (௮௯)

அளியினமு டக்க ருட்பி ளேடி ரதமுணங் கைப்ப டிந்து வேள்
வி லமர்செயவ ளைத்து நின்ற பான்மை தரசீர்மே, லொளிர்குவளைபத்
ம மம்பின் மேல வுருவிலியு டற்ற வந்த தாக வுழவியர்மதித்து முன்
கொ ளுற்ற லொருவர்நீள், களிபுறவு ரத்த ணைந்த போது களமாலை
கட்கி றைஞ்சி வாழ்செப் கருளிமன்வ ளத்தி லங்குகூட னகர்வாழ்
வோய், விளிவரிய தத்து வங்கடோண் ணூறொரு டறுபடிவ ழிக்கொ டும்
பகேறி விரவுறமெய் யப்ப வொன்றி னேடு மருள்வாயே. [௯௦]

## வேறு

அருட்பாமுத் திசைமுடிவி னடியரிற்சேர்த் தருண்முறைமெய்
யப்ப னெம்மான், றிருப்பணிமுற் பலவியற்றிச் சரியாதி புரிந்துபின
ர்ச் சேக்கி ழார்வாய்த், தருக்குறு நாற் றொண்டர்குரு பூசைநிறீ இ,
இனந்தோறுந் தகைசா லந்நாற், பொருட்பெருக முகமலரப் புகன்
றுரைத்தி யெமக்குணரப் புணர்த்தி னைல். [௯௧]

புணர்முலையார்க் குடைந்துமனம் புண்ணாகி யென்னுறுநன் புக
ழோன் றேனு, மணவரிய வமுதுகம ருகுத்தாங்கு வாணுளையவமே
போக்கி, யெணவரிய துயர்பயக்கு மெரிநரகுக் காளாக விருக்கின்
றேனை, யிணர்மலர்ச்செங் கழுநீர்த்தா ரெந்தாய்மெய் யப்ப நின்க
ணெடுத்தாள் வாயே. [௯௨]

வாயுள்ளே துதித்திடமெய் யப்பசெவி நின்புகழே யகிழ்ந்து
கேட்பச், சேயகலி யாணவருட் டிருமேனி கண் காணத் தேவ ரூர்
சேர், தூயமணிச் சிகரமதில் சுலாவுசின கரம்புகுந்து சூழ்ந்து போற்
றக், காயமுறத் தியானித்துக் கன்மனகன் மனமாகக் கருது வாயோ.

கருட்டியக்க மொழித்தகக்கண் கலந்தொன்றைக் காட்டுதின
கன்மெய்த் தாதை, யருட்டிருமெய் நாயன்மார்ப் பதிட்டைசெய்து
பூசைநிறீஇ யவலமார்க்கஞ் சுருட்டியன்பர் [illegible] பதிப்பு

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

யாழ்ப்பாணத்து மாதகல்

மயில்வாகனப்புலவர்

இயற்றிய

# புலியூரந்தாதி

மூலமும்,

உரையாசிரியர்

**ம. க. வேற்பிள்ளையவர்கள்**

செய்த

புத்துரையும்.

இவை

பருத்தித்துறை புத்தகவியாபாரம்

சு. ப. சுல்தான் சிக்கந்தர்

வேண்டுகோளின்படி

ஷை உரையாசிரியரின் சிரேஷ்டபுத்திரரும்

மட்டுவில் இந்து ஆங்கிலதிராவிடவித்தியாசாலைப்

பிரதமஉபாத்தியாயருமாகிய

**திருஞானசம்பந்தப்பிள்ளையால்**

பருத்தித்துறை

கலாநிதியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டுப்

பிரகடனஞ்செய்யப்பட்டன.

விசுவாவசு௵ மாசி௴.

இரண்டாம் பதிப்பு.

1906.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

நல்லூர்

## ஸ்ரீமத் வே. கார்த்திகேயோபாத்தியாயர்.

பன்னிருசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

*புகழ்கின்ற வீழத்தி யாழ்ப்பாண மாநகற் புனிதமயில் வாகனப்பேர்*
*புலவரரு ளியபரம பதிமகிமை துதிசெயும் புலியூரி னந்தாதியை*
*யுகள்கின்ற கல்வியறி வாசார னியதிகளி னொப்பிலறு பூதிமானு*
*யுயர்நல்லை யாறுமுக நாவல வருட்குருவி னுண்மையன் புறுசீடரிற்*
*றிகழ்கின்ற வன்சுகுண கணபதிப் பிள்ளைதன் சேய்திருநெல் வேலிவாசன்*
*றிரமருவு மட்டுவிற் சைவப்ர காசவித் யாசாலை யதிபதிதிரு*
*னிகழ்கின்ற வேற்பிள்ளை பலபிரதி ரூபங்கள் கொடுதிருத் துபுனிகழ்த்து*
*னிகரில்புத் துரையொடச் சிற்பதிப் பித்துலகி னிலவுற னிறீஇயினனே.*

---

நல்லூர் வித்துவசிரோமணி

## ஸ்ரீமத் ச. பொன்னம்பலபிள்ளை.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

*சீர்மேவு நதிமதியொ டரவமருஞ் செய்யசடைச் செம்மன் மேய*
*வேர்மேவு புலியூரந் தாதிதனக் குரையையியல் வாய்ப்பச் செய்தான்*
*தார்மேவு பொழில்புடைசூழ் நெல்லையாம் பதியனருந் தமிழின் மிக்கோன்*
*பேர்மேவு கணபதிவேள் பெறுகுரிசில் வேற்பிள்ளைப் பெயரி னனே.*

---

உடுப்பிட்டி

## ஸ்ரீமத் அ. சிவசம்புப்புலவர்

நேரிசையாசிரியப்பா.

*கங்கையு மதியுங் கடுக்கையு மாத்தியுந், தங்கிய மின்னிறச் சடைமுடி நாதன், கருமல மொழித்துக் கதியுயிர்க் கருள, னிருமல வுருக்கொடு னின்ற னிராமயன், யோக முதவிட யோகியாய்ப் பஃறிறப், போக முதவிடப் போகியா யுறைவா, னுவியை யாட்ட வானந்த தாண்டவ, மோவிலா தாடு மோங்கிய கருணையோன், றுன்றிய வுயிர்களைச் சுகனிலை வைப்பா, னென்று மைந்தொழி லியற்று மியற்றுவோன், சோதியாய்ச் சுடராய்ச் சூழொளி விளக்கா, யோதியாய் னிலவு மொப்புயர் வில்லோ, னோரா னணமறை யோ*

ரொடன் றூற்ற, சிரா ணன்றிருச் செவியிடைச் சேர, வளர்சுவைச் சொற்
பொருள் வண்ண மடக்குக், கிளரிராமேசர் கினிவிடு தூது, மிகமத முறு
கவி வேழத் தொகைக, ளிகலெறு தோட்டியா மிரகு வமிசமு, மாற்றரும்
பிணியையு மருந்தையு மினிதுரைத், தேற்றமிக் குளபர ராசசே கரமும்,
வியனெறிக் கணிதர்கள் விழைவொடு போற்று, மியனெறி யுறுஞ்செக
ராசசே கரமுஞ், சீலமெய்த் திறனருள் சிவஞ்சி புராணமு, மாலமுற் றெரு
ழித்திடு மமுதா கரமு, மறைசையந் தாதிகல் வளையந் தாதியு, நறைமல
ரடிக்குரு நாதரு லாவுமா, மின்னன பற்பல வியற்றுபு மேன்மை, மன்னி
யாழ்ப் பாண மாநக ரமர்ந்த, பதரில் கேள்விப் புதரில் வாய்ந்த, விதியிற் கி
ளர்ந்த மதியிற் றலைவன், கையா ரழலுடை யையா னனற்றெருழு, மெய்
யார் புனித வையா மரபினன், மாதகல் வாழ்மயில் வாகனப் புலவ, னே
றிய தென்புலியூரந் தாதிக், கென்றவின் றிலங்கவு மெவரு நயப்பவு, மொ
ன்றிய வுரையிங் கொன்றுளுற் றுதியென, யாமிய திசைக்கன் றெதிருறு
திசைக்குமோ, ரமநற் கலைமுனி யிருந்தன னென்னப், புடவி சொலக்க
லைப் புணரியை முகந்து, திடமொடு தேக்கெறி தேசிகோத் தமனுய்ச், சா
ன்ற கனக சபாபதி யோகியாம், போன்றவர் பிறரிலாப் புண்ணிய னடித
ழீஇ, யொவ்வொரு நூலையு மொவ்வொரு முறைவினு, யவ்வவர் சொற்
பொரு ளனைத்தையு மகத்தமைத், தாழ்படு திறமிதென் றுலக முவப்பக்,
காழ்படு கடுமையிற் கற்று நிறைந்த, திதமுறு நுண்மதிச் சேனதிராய, மு
தலிபா லினுமவன் முதன்மா ணக்கனு, மண்புகழ் தனக்கு மைத்துன னு
மெலாப், பண்பு நிறைந்தசம் பந்தப் புலவன், சிறியேற் கொண்கலை தேற்
றுநாட் டாளுமெய்ந், நெறியாற் றேற்றிய நீளருட் குரவனுந், தண்டமிழ்க்
கடலுமாஞ் சரவண முத்துப், பண்டிதன் பாலினும் பரிவொடு பணிவுறீஇ
ச், சகநா டெங்கணுஞ் சார்ந்தசீ ராறு, முகநா வலனொடு முதிரிசை முழுப்
பூண், பூண்டசம் பந்தப் புலவ னொடுக்கெழீஇ. யீண்டிய கேண்மையின்
யாண்டுபல கற்றேன், வேலா யுதப்பெயர் மேவிய வித்தகன், காலா யுதக்
கொடிக் கந்தனைப் பரவி, யிரங்கிடெந் தாயென் றிணைமலர்த் தாட்கீழ், வ
ரங்கிடந் தீன்ற மாண்புடைச் செம்ம, னன்மா ணக்கரை நண்புறக் கூஉய்
த், தொன்மாண் கலைதருஞ் சுத்த மனத்தோ, னரியநாற் பாதத் தரும்பெ
னக் காணுஞ், சரியை நியமந் தவாத செல்வன், றெருள்வீற் றிருந்தமெய்
ச் சிந்தைகுடி கொண்ட, வருள்வீற் றிருந்த வறுமுகத் தெம்பிரா, னுணவ
முடைக்குமா ணந்தமா ணிக்கத், தாணிமி ருத்தமத் தகைசால் பத்தியான்,
வெண்ணீற் றொளியுரு மேனியைப் பத்திமைக், கண்ணீர்க் கடலிற் கழீஇ
வினை கடிவோன், வினையற வெழுந்த வீட்டுநூற் பொருடெரீஇ, மனையற
ம் வெறுத்த மாசில் காட்சியோன், றேசா ரியல்வகை திருந்திய கார்த்திகே
யாசா ரியன்றனக் கிறப்பு நூல்பல, திரமுறத் தேற்றிய செவ்விய கிழமை
யின், விரிவுறு மகிழ்வொடு விளம்பினனாக, வுற்றுங் கவன்மொழி யுள
முறத் தலைக்கொளீஇ, யற்ற குகவென வாய்ந்து புரிந்தனன், பீடுறு கயி

# சிறப்புப்பாயிரம்.

ட்டிகப் பிரம சாரியாய், நிறு சிவார்ச்சனை நெறியின் றரன்பத, முன்னி
ய வாறு முகநா வலன்றனு, மன்னவற் கினியமா ணாக்கனு மருகனுஞ், சர
வண முத்துமா றனையனு மாயபேர், விரவுபொன் னம்பல வித்து வான்க
ளும், பாங்குற வழிபடீஇப் பஃறிற னுறபொரு, ளோங்குற விளைய்வெளி
ரொழித்தநுண் மதியோன், மாவரு ணிலைமையின் மாறு தொளிரு, மீவி
ரி செங்கேழ் விளக்கொன் றனந்த, மாய தெனவொளி ரணிதிகழ் மணிமு
லைத், தாயெனு மேதகைச் சாந்தநா யகியொடு, மாட்சிசேர் சந்திர மௌலீ
ச ரென்றுங், காட்சிதந் தமருங் கடிமதிற் கோவிலுஞ், செழுநீ லத்தொகை
கெழுநீர் வாவியு, முழுநீர்ப் படுசெங் கழுநீர்த் தடமுஞ், சூதமு மரம்பையு
ந் தொன்னிலங் கீன்றுவேர், மீதெழு முட்புற விரைப்பழ வருக்கையும்,
வாளையே றுகண்டு மடலங் கமுகின், பாளைகீன் றலவு றூஉம் பதுமவான்
றடமுஞ், செந்நெலின் கன்னற் றெரித்திடக் கந்திலையக், கன்னல்கள் கா
ட்டிடுங் கழனிசூழ் வைப்புர், தடவிலை குலவிய சத்திரீ மூன்றிரு, மடமு மி
லாவிய மட்டுவிற் பதியிற், றெய்வவெண் ணீற்றுத் திருவின் றோங்குறூஉ
ஞ், சைவ வித்தியா சாலைக் கதிபன், கண்டரு நதியாற் கவினுறு கண்ணெ
லாந், தொண்டரு மண்டருந் தோணிசெய் தேத்தப், பங்கொரு மயிலுடை
ப் பசுபதியவர்க்குப், பொங்கருள் செய்தமர் புலோலியம் பதியிற், றூனவி
ளைசமுந் தருமமாண் புந்தவாச், சானவி மரபு தயங்க வுதித்த, காணடகு
செல்வக் கணபதிப் பிள்ளைதன், மாண்டகு தவமொரு வடிவெடுத் தனையா
னெனுறு கலைப்பொருள் யாவையு மியல்புளி, மாணவ கர்க்கு வழங்குந் தி
யாகி, கல்வியும் வாய்மையுங் கனமும் புகழுஞ், செல்வமு மீகையுஞ் சினக
ர வளமுஞ், சேவிவர் பரம சிவமத நெறியு, மேவியதிருநெல் வேலி வாச,
னின்பரு ளெண்குணத் திறைமாட், டன்பு நிலைமை யுறுவேற் பிள்ளையே.

---

புலோலிநகர்

ஸ்ரீமத் ம. முத்துக்குமாரசுவாமிக்குருக்கள்.

நேரிசைவெண்பா.

பாரேறு பல்வளமும் பல்கியொளி ரீழநன்னாட்
டேரேறி யாழ்ப்பாணத் தெய்தியுள—பேரேறு
மாதைப் பதிவாழ் மயில்வாக னப்புலவன்
மேதைசா லன்பு விளைந்து.

துய்யபுலி யூர்வாழுந் தொல்லோன்ப தம்பேணிச்
செய்யபுக ழந்தாதி செப்பினனஃ—தொய்யெனவே
யாரு மினிதுணர வாராய்ந்தொர் நல்லுரையைச்
சீருறவே செய்தான் றெரிந்து.

திருமலியாழ்ப் பாணத்துச் சீரார் புலோலி
வருகணப திப்பிள்ளை வள்ள—லருதனய
னுண்மை பொறையன் புயரடக்க மாதிகுண
வண்மைபெறு செல்வ வரன்.

வரமாரு நல்லைநகர் வான்கிரிதீ பம்போற்
சிரமார் புலவோருட் சீர்த்தி—திரமார்
பலர்புகழுங் கார்த்திகேயோ பாத்யா யன்பொன்னம்
பலப்பண்டி தேசனிவர் பால்.

ஆன்றோர் புகழுமகா ஞானமுக நாவலர்பா
லேன்றோர் வியப்பமுறை யெய்தியே—தோன்றோ
வதிநுட்ப நூல்கள்பல வாய்கல்வி கேள்வி
மதிநுட்ப நன்பா வலன்.

மாசனுகா மட்டுவிலின் மன்னிவளர் சைவப்ர
காசவித்யா சாலை கருதியமைத்—தேசகலக்
கற்பார்க் கறிவூட்டுங் காருண்யன் வேற்பிள்ளை
சொற்பாற் றமிழ்வித் துவான்.

---

புலோலிநகர்

## ஸ்ரீமத் வ. குமாரசுவாமிப்புலவர்.

(அஷ்டகம்) எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மாதங்க மேருகிரி யின்றும் போந்து மனுகுலத்துச் சிங்கவன்மன் மகிழ்வாற் கண்ட, மாதங்க மன்றுமின்றெவ் வுயிர்க்குமாக்கம் வகுத்தளிக்க வளித்தழிக்க வாரீ சத்து, மாதங்க மேனியனு மயனுங் காணு மலர்க்கழலன் பினர்காண மகிழ்வினொடு, மாதங்க மேனியரும் புலியூ ரானை வழுத்தி யொரு பிரபந்தம் வகுப்ப னென்றே.

கோதகலு மிந்துசமுத் திரமா நெய்யிற் குலவுமிலங் காதீபக் குவலயத்திற், றீதகலும் வடதிசையாழ்ப் பாணமென்னுந் தீபகற்பத் தொருசாரிற்றிகழுமேன்மை, மாதகலென் றுள்ளவளம் பதிவே ளாள மரபினன் செந் தமிழ்க்கவிஞன் வழுவா தாய்ந்து, வாதகலு மந்தாதி யமக மாக மதித் துமயில் வாகனன்றான் வகுத்தா னன்றே

அன்றுரைத்த புலியூரந் தாதிக் கர்த்த மறிந்திவோர் சிலரன்றி யறியார் பல்லோர்,சென்றுரைத்த போதனையாற் கொள்ளு முள்ளச் சிறுவருந்தே சிகரின்றித் தெளியுமாற்றா, னன்றுரைத்த பொருளெழுது கெனத் தனக்கு நற்றமிழ்போ தித்த நல்லூர் நாய்கரேறும், குன்றுரைத்த தமிழ்க் கலைஞன் கார்த்தி கேயக் குரவனினி துரைத்தபணி சிரமேற் கொண்டே,

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பல்லூரி னல்லாரும் பலமதத்திற் சிலமதமும் படித்துத் தேருஞ், சொல்லூரும் பாடைகளிற் சுவைத்தமிழு நன்மரபுந் தொகையோர் நான்கின், வில்லூரு மதிவேணி மிசையிசைசுங் காகுலமும் விழுப்ப மெய்த, வொல்லாரும் வியந்துரைத்த தூழியினுந் தொலையாதங் குறித்த சீரான்.

ஆகியவுத் தமனுகு மாறுமுக நாவலன்ற னிடத்து மாழ்ந்துள், ளேகியவின் னென்மருக னியற்றமிழி லெத்திறத்து மிணையி லார்தான், வேகியல னைவருக்கும் வித்துவ சிரோமணியாய் விளங்கி யெங்கும், போகியசீ ரான்பொன்னம் பலவனிடத் திறுந்தமிழைப் பொருந்தக் கற்றோன்.

### தரவுகொச்சகக்கலிப்பா.

நட்டுவரி விளைகழனி நன்மருத நாடேயா
மட்டுவிலென் றொருபதியின் மாணவரங் கறியாமை
விட்டுவகை படத்தமிழை விளக்கவொரு கலாசாலை
கட்டுவித்தங் கதிபதியாக் களங்கமற நடத்து விப்போன்.

### எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தேங்குபுனற் பகீரதியின் குலத்தான் செல்வஞ் சிறந்தகண பதிப்பிள்ளைச் செம்மல் செய்த, வோங்குதவப் பயனெனவந் துதித்தோ னல்லூர்க் கொருசாரிற் றிகழ்வளத்துக் குறையு ளான, பாங்குபெறு செழுந்திருநெல் வேலி யென்னும் பழம்பதியே விளங்கியதன் பதியாக்கொண் டோன், றூங்குகுட தீபமென விருந்த காலந் தவிர்ந்துகிரி தீபமெனத் தயங்கப்பெற்றே.

சக்கரத்தை யோதிமத்தான் மதித்து முன்னுட் சக்கரத்தான் சுவையமுதந் தந்த வாபோ,லக்கரத்தை யொருவடிவா யடிமுன் னுடி,யமைத்தருத்தம் பிறிதுபிறி தாக்கு நூறு, துக்கரத்தை யுடையகவிப் பொருளையாய்ந்து துகளறவே யெளிதெவருந் துணியு மாற்றான், மிக்கரத்தைப் பகுதலின்றி வேலுப் பிள்ளை விரும்புதமி ழறிஞனுரை விளம்பி னானே.

---

புலோலிநகர்

## ஸ்ரீமத் அ. வேன்மயில்வாகனஉபாத்தியாயர்

---

### கட்டளைக்கலித்துறை.

சேணுற் றிடுபொழில் யாழ்ப்பாண மாதகற் சென்மிதனுப்
பேணுற் றிடுபுல வோன்மயில் வாகனன் பெட்புறச்சொன்
மாணுற் றிடுநற் புலியூரந் தாதிக்கு வாய்ப்புறவோ
ரேணுற் றிடுமுரை செய்தெழி லாரச் சிறுதியென்றே.

செல்லூரு மிஞ்சிகல் லூரே திகழுஞ் செழும்பதியாச்
சொல்லூர் புகழுமை வேலா யுதன்செய்த தூய்யதவத்
தெல்லூர் மணியென வந்திசை வைத்தவ னின்றமிழைப்
பல்லூ ரவர்க்கும் பகர்கார்த்தி கேயன் பணித்திடவே.

அன்றோ னிடத்தினு முன்னே புகன்றநல் லூரடைந்த
முன்றோனம் மாறு முகநா வலன்றிரு முன்னருஞ்சொ
லின்றோன் மருக னெனவந்த வித்வ சிரோமணிப்பேர்
மன்றும்பொன் னம்பலப் பிள்ளைதன் மாட்டினும் வாய்த்திடவே.

கற்றோ னிலக்கண லக்கிய மற்றுள கல்வியெலா
மற்றோரொப் பில்லவன் வேளாண் மரபொளிர் மாண்புடையோ
னுற்றோர்ந் திடுமியன் மட்டுவிற் பேர்ப்பதி யுற்றிடுதீங்
கற்றோர்க் கருள்சைவ வக்கழ கத்துக் கதிபதியே.

கயல்சேர்ந்த நீர்வயல் யாழ்ப்பாணத் துக்கனங் காட்டுநயச்
செயல்சேர்ந்த சீர்த்திரு நெல்வேலி யன்றினஞ் செய்தவத்தா
னுயல்சேர் கணபதிப் பிள்ளைக் கொருசுத னுவுதித்த
வியல்வேலுப் பிள்ளை யுரைசெய் தெழிலச்சி னிட்டனனே.

---

சுன்னாகம் ஸ்ரீமத். அ. குமாரசுவாமிப்புலவர்.

---

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தில்லைநட ராசனடிக் கன்பு மிக்கோன்
செயமயில்வா கனப்புலவன் சென்றுட் செய்த
மல்லல்பெறும் புலியூரந் தாதிக் கேற்ப
வாய்மைமிகு முறையொன்றை வரைந்திட் டீந்தா
னல்லைநகர் நாவலருக் கன்பார் சீட
னருதிருநெல் வேலியெனு நகரி வாசன்
சொல்லுகண பதிப்பிள்ளை யருளு மைந்தன்
சுகுணமுறும் வேற்பிள்ளைத் தோனறன் மாதோ.

---

ஊரெழு ஸ்ரீமத். சு. சரவணமுத்துப்பிள்ளை.

---

கட்டளைக்கலித்துறை.

மாதகன் மேவு மயில்வாக னப்புல வன்புலியூர்க்
கோதி லியமக வந்தாதிக் கோருரை கூறினனற்
றீதக லுந்திரு நெல்வேலி வாழ்பவன் றேறுகலை
யோதிய சீர்த்தியன் வேற்பிள்ளை யென்றிடு முத்தமனே.

---

